# அருள்சந்-கவிதைகள்-1



## முன்னுரை

ஏற்றத்தாழ்வு அடிமைத்தனம்
சுதந்திரம் சமத்துவம்..
ஒன்றிற்கு இவை தெரியாதது.!
அந்த ஒன்றைத்தேடி
ஓராயிரம் ஞானங்கள்.
ஒன்று இரண்டாகி
பல்கிப்பெருகியதால்
பொருளும் உயிரும் இப்பூவுலகில்.

ஒன்று இரண்டானதால்..
கணவனுக்கு மனைவி சாரம்.
மூன்றானதால்..
தந்தைக்கு மகன் சாரம்.
பல்கிப்பெருகியதால்..
பேரினத்திற்கு பல இனங்கள் சாரம்.
பேரரசிற்கு மதங்கள் சாரம்.
மதத்திற்கோ மக்கள் பிரிவு சாரம்.
வருணத்திற்கு சாதிகள் சாரம்.
சாரத்தின் துன்பமே தாழ்வும் அடிமைத்தனமும்.
சாரத்தின் இன்பமா சுதந்திரமும் சமத்துவமும்.?
துன்பத்தில் மனித இனம்..
இன்பத்தின் சாரம் எதுவென்பதை தேடுதற்கே
என் எண்ணங்களும் எழுத்துக்களும்..



அன்புடன்,

-அருள்சந்,திருச்சி-25
26-01-2020



# அற்புதவிளக்கு..!

பூதத்தை உசிப்பிட எழுதுதல்
மகாசிரமம் ஆகும்.
எண்ணில்லா எழுத்துக்கள்
ஞாலமெங்கும் பல மொழிகளில்
தீச்சரங்களாய் எழுதப்பட்டாலும்
பூதம் கிளம்பியபாடில்லை.
அந்த அற்புதவிளக்கை ஏற்றிட
இன்னுயிர் சிந்திடும் இரத்தமும்
இன்னும் உறைந்தபாடில்லை.
கார்ல்.. உன் கம்யுன் கற்பனை உலகை
செதுக்கிடும் கோடி விரல் பூதம் தன்
நித்திரையை இன்னும் கலைத்தபாடில்லை.
உன் வழிதோன்றல்களின்
ஆயுதம் ஏந்தும்-ஏந்தா,சிந்தும்-சிந்தா
எண்ணில்லா பாதைகளின் பாத அதிர்வின்
பூபாள கீதத்தில் பூதம் லேசாக விழித்தது.!
ருஷ்ய-சீன-கியூப..இன்னும் பல நாட்டினில்
கம்யுன் சமூகத்திற்கு ஒத்திகை பார்த்தது..!

என் தாய் நாட்டில்..
பூதம் கிளம்பாமலேயே
உன் கற்பனை சமூகம் நிஜபடப்போகிறதோ.!
ஆறிய உணவிற்கு மாறாய்
அடுப்படி உழைப்பு-நெருப்பு; இதன் சேமிப்பு..
நூறு குடும்பத்திற்கு ஓர் அடுப்பு.!
சூடாய் அறுஞ்சுவை உணவு..பெண்ணே!
அம்மா உணவகம் ஒரு மைல்கல்லோ.!
சின்னஞ்சிறு மழலைகட்கு
தாய் பாலுடன் உணவிடும் பால்வாடி..
பள்ளி சிறார்கட்கோ அரசின் சத்துணவு..
புத்தகம்,சீருடை,சைக்கிள்,லேப்..
ஒரு கம்யுன் சமூகத்தின் முன்னோட்டமோ.!
பெண்ணில்லையெனில் குடும்பம் ஏது.?
மலிவான குடியிருப்பு,ஆட்சியில் முப்பது சதம்..
இராணுவம் உட்பட யாதிலும் வேலை..
யாவும் பெண்ணை விடுவிக்கும்
கம்யூன் உலகின் திறவுகோலோ.!
உழைப்பின் செழிப்பின் கருப்பு பணம்
மின்னனு வளர்ச்சியில்
உதிர்வதற்காக ஒரு ராஜமுயற்சி..
சுரண்டலும் வறுமையும் தொடர்ந்தாலும்
ஏழையின் குடிசைக்கு நூறு நாள் வேலை..
அரசின் விலையில்லா பண்டங்கள்..
பூதம் கிளம்பாமலேயே கார்ல்..
உன் கம்யுன் உலகு நிஜபடப்போகிறதோ.!

*-அருள்சந்,குன்னூர்,29-12-2016*

# கரிமனம்.



அயலாரை பார்த்தாலோ
வேற்றாரை கண்டாலோ கம்பளிபூச்சிகள்
என் கண்திரையில் நெளிந்திடும்.
தன் காலடி நடையில்
கற்களுக்கிடையில்
பளிச்சிடும் பொற்காசுகள்..
என் பைக்குள் போடச்சொல்லும்.
ஏமாறும் எழில் பெண்..
பொன்போல் தன்வசமாக்கும்.
கரிபாறை உழைப்பு..
ஏமாற்று வித்தையில்
என்திறன் அதை முதலாக்கும்.
இவை யாதும் தப்பென்றாலும்
என் கரிமனம் எப்பொழுதும் சரி என்கும்.



பொன்மன பாழைகள்
கரிமேட்டில் காய்ந்தாலும்
என் அடர்கரிமனம்
நந்தவனத்தில் வாழ சொல்லும்.
மார்கழி குளிரிலும் வெதுவெது நீரில்
என் மேனி நறுமணம் பெறச்செய்யும்..
ஏன்.? கரிபுகைக்காற்றுக்கூட
கொட்டும் மழையில்
குளித்துத்தெளிந்தாலும்
என் கரிமன காற்று முழுக்கிட மறுத்திடும்.



ஆனால்..எங்கோ உலகில் ஒருபுறம்..
ஓர்பொன்மனம்
தன்பொருளொன்றை
தானறியாது ஒருபொழுதில் தவறவிடும்..
ஏதோவொரு இடறலில்
மீண்டும் அது தென்படும்.
அப்பொருள்.. யார்பொருளென
விசாரிக்கும் இடம்தனில்
வைத்திடும் அப்பொன்மனம்.!
கார்ல்..அது உன் கம்யுன் உலகிலோ..!



-அருள்சந் *குன்னூர்,29-01-2017.*







# எங்கே என் சொர்க்கம்..?

இருபிறப்பாளர்களுக்கு.. நான்
எல்லா வசதிகளையும் செய்திடும் அடிமை.
அது என்ன இருபிறப்பு..?
ஒன்று இப்பூவுலகில் வளமான வாழ்க்கைக்கு..
மற்றது இறப்புக்குப்பின் தேவசொர்க்கலோகத்தில்.
ஆனால் எனக்கோ தேவசொர்க்கலோகப்பயணம்
கனவிலும் கிடையாது.

கர்ப்பத்திலிருந்து எட்டாம் ஆண்டில்
பிராமணனுக்கு பருத்தி நூலில் பூணூல்..
சத்ரியனுக்கு பதினோராம் ஆண்டில்
சணல் நாரை முறுக்கி பூணூல்..
வைசியனுக்கோ பனிரெண்டாம் ஆண்டில்
வெள்ளாட்டு ரோமத்தில் பின்னிய பூணூல்..
கேசம்வரை உயரம்கொண்ட வில்வ கொம்பை
நெற்றிவரை நீளமுள்ள ஆல் விழுதை
நாசிதனை தொடும் அத்திக்கிளையை
ஏந்தியபடி இருபிறப்பாளர்கள் காயத்ரி ஜெபித்து
பிரம்மசரியம்-கிரஹஸ்தம்-
வானபிரஸ்தம்-சந்நியாசமென
லௌகீக வாழ்வினை கடந்தால் மட்டுமே
சொர்க்கத்தின் வாசல் வழி திறக்கும்.
இல்லையெனில் விராத்தியனாய் திரிதல் வேண்டும்.

நானோ, என் அடிமை ஆதிசூத்திரனோ
முப்புரிநூல் அணிதல் குற்றமாகும்..
வேதம் கேட்டலோ கற்றலோ கூடவே கூடாது..
மாகவி பாரதிச்செயல் போல்
விராத்தியர் சொல்கேட்டு
சூத்திரன் நான் பூணூல் அணிந்து
காயத்ரி அத்துப்படி ஆனது அறிகையில்...
என் காதிற்குள் ஈயமும் அரக்கும்
காய்ச்சி ஊற்றப்படும்.
என் அறுசுவை நாக்கு வெட்டியெறியப்படும்.

இம்மையிலும் கற்பனா மறுமையிலும்
என் ஆண்டைகளுக்கு
இன்பம்தனை உறுதிசெய்த ஏய்.!மனுவே..
பாடாய்படுத்தும் என் வழிவழிக்கும்
எனக்கும் ஏனில்லை சொர்க்கம்.?
சத்ரிய இம்சை தாங்காமல்
இரண்டுக்குமிடையில்
திரிசங்கு சொர்க்கம் வைத்தாயே..!எமக்கு ஏன்
சூத்திர சொர்க்கம் படைக்க மறுத்தாய்..?
ஆண்டை-அடிமை சாதி வர்க்கம்
மறைந்திடும் என்பதால்தானோ..?

*-அருள்சந் குன்னூர்,04-02-2017.*







# காவிரி.

வரவேண்டியவள் இன்னும் வரவில்லை
இன்றா நேற்றா
ஒன்றின் கீழ் ஒன்றாய்
காய்ந்து அடித்ததும்
கருகி அழிந்ததும்
முழுமையின் பகுதியாய்
விதைக்கும் கணத்தில்
ஞாபகம் மீளும்.

காற்றின் வெட்கையில் படியும் துகள்கள்
தடுப்பு அடைப்பு மூச்சின் இரைப்பு
முகட்டிலும் வெளியிலும்
உரிமைக்குரல்கள்
அவள் வரவை தடுக்கும்.
ஜீவநதி! ஒரு பொருள் சொற்கள்
தன் அர்த்தம் இழக்கும்.
மீறும் உடன்படிக்கை
வரவேண்டியவள் இன்னும் வரவில்லை
காய்தல் அழிதல்
இளமை சாதலில் வெற்றி.





வாராது போய்விடுவாளோ?
வானவீதியில் கருணையின் கீற்று
காற்று புயல் மழை
தடுப்பு அடைப்பு தகர்ப்பு
கரைபுரண்டாள் அவள்..
பசுமையின் செழிப்பு
தென்றலில் மகரந்தப்பொன்
கதிர்கள் சாயும்;
துயில்வெளியில் உடன்படிக்கை
காய்தல் அடித்தல்
இளமை வாழ்தலில் வெற்றி.
வாராது போய்விடுவாளோ!

-அருள்சந்
16-06-2015








# ஜல்லி கட்டு...!



ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு
முல்லை நில தலைவி..
என்னை ஆளபோகிறவன் யாரென்ற கேள்விக்கு,
தோழியிடம் சொன்ன பதில்..
கவிகளின் கற்பனை சிற்பமல்ல..!
இன்றைக்கும் நிகழ்த்தப்படும் நிஜமாகும்.
வாடிவாசல் தாண்டி..கால் நான்கின் பாய்ச்சலில்
ஒருநூறு வாலிபங்களை விசிறியெறிந்து
குளங்கள் நான்கை செந்நீராக்கி
கடைசி குளத்தையும் இளம்ரத்தத்தில் கலக்கி
தேரோடிடும் வீதியை மிரட்டிடுமாம் ஓர் ஜல்லிகாளை.!
என்பதை நன்கறிந்த மாவீரனவன்...
வலதே பாய்ந்து கைதனிலுள்ள வெண்துவாலையால்
ரத்தம் தோய்ந்த இருகூர்கொம்பினை இருக்கி
வன்திமிழ் காளையை அடக்குவானடி...
அவனே எனையாளும் மணவாளன்..!



முரட்டுக்காளையும் உழைக்கும் பசுவும்
பாசப்பிராணிகள் அல்ல..
உழவின் தோழன்..உணவின் மூலம்..
திராவிடரின் சூரிய தெய்வம்...!
அரசியலும் சட்டமும் 2016-ல் பீட்டாவின்
சதி சதுரங்கத்தில் குயின்செக் ஆனதில்..
அழிவை நோக்கி தமிழ்நில காளைகள்..
மரபு மீட்க கொதித்தெழுந்ததே
இளம்தமிழ் வீரம்..! 2017-ல்
மெரினாவும் ஏன் மொத்தத்தமிழகமும்
ஏறுத்தழுவலுக்காக
ஆகாவென்று கண்டதே பேரெழுச்சி..!
காவல்மீறலோ தமிழ் ரத்தம் குடித்தது..
சட்டஅரசியலும் பீட்டாவின்
சதுரங்க ஆட்டமும் சரணாகதியென்றானது..
ஜல்லி கட்டு வாடிவாசல்
வெடியோசையுடன் திறந்தது..!
காளைகள் செழித்திட
தமிழின வீரம் மீண்டும் நிஜமாகியது..!






மரபினை நீட்டிக்கும் கலாச்சாரம்..!
கிழித்து எறியும் நாட்காட்டி அல்ல.
சமூக அமைதிக்கோர் நேசக்கரம்..!
மரபை மீட்கும் வீரத்தின் எழுச்சியை
கல்வெட்டில் கொத்துவது ஓர்
கவிஞனின் கால கடமை.



*-அருள்சந்,*
*குன்னூர்,18-02-2017.*

# கற்சிலை..கடத்தல் பொருளல்ல..



கல் தோன்றி..மூத்த குடி..
பூவுலகில் யாரென்ற தொல் ஆய்வு..
ருத்ராட்ச பூனையின் தடங்கலை தாண்டி
பதுங்கி சீரிடும் எட்டடி பாய்ச்சலில்
வரிபுலியின் கீறல்.. கீழடி தோண்டல்கள்..!
மூத்த குடி செந்தமிழ்குடி என்பதை
உலகு உணர்ந்திடும் விண்மீன்களாய் நம் தேடல் அறிவு.

இமயத்தில் தமிழ்கொடி பறந்ததும்,
விந்தியத்தில் கல்லெடுத்து கண்ணகிக்கு சிலை வடித்ததும்,
வடதிசையோர் நம் அருங்கலை பொறைமிகுந்து
சில காலம் நம்மீது போர்கொண்டு - அதனால்
கற்சிலை சிதிலமும், ஐம்பொற்சிலை களவுதல் ஆனதும்
கால ஆடியில் நிழலாடும் பிம்பங்கள்..



கல்லிலே கலைவண்ணம் கண்டு,
ஐம்பொன்னில் பொற்சிலைகள் செய்து,தமிழ் மண்ணில்
38615 சங்க,பாண்டிய,சோழ,பல்லவ,விஜயநகர..
கோவில்கள் நிறுவி, அருகே ஜில் தடாகங்கள் அமைத்து..
“கோயில்களின் நிலம்” என பாருக்குள் அழைக்கப்படும்
கடல் கொண்ட தமிழ் உலகின் எஞ்சிய நிலம். அதை
அழித்திடும் தகிடுதித்தர்கள் காலமிது.



இந்தியம் உலக முதலாளிஸ்டின் ஓர் அங்கமான காலம்..
தமிழ் தேசியம் இந்தியத்தின் ஓர் பகுதியான மாநிலம்..
அதன் கள்ள கடத்தல் பண்பு..1920-களில்
பாண்டிச்சேரி கற்சிலை கடத்தலால்
புறம் காட்டா தமிழ் மாண்பினை களங்கப்படுத்தியது.
1957-லோ ஐம்பொற்சிலை கடத்தல்...
முதலாளிஸ்டின் சொர்கபுரி அமேரிக்காவில்
இன்றும் அருங்காட்சி தரும் சிவபுரத்து சோமஸ்கந்தரும்,
பறங்கியிடமிருந்து மீட்கப்பட்ட திருவேலக்குடி நடராஜரும்..
சோழர்களின் பராக்கிரமத்தை முதுகில் குத்தியதாகும்.



2012-முதலோ அதிவேக நவீன கள்ள கடத்தல்..
இது நாள் வரை கருங்கற்சிலையும், ஐம்பொன் சிலையும்,
பொய்சிலை வைத்து களவாடியதும் ஐம்பதாயிரம் இருக்குமாம்..
மதிப்போ நாற்பதனாயிரம் கோடியாம்..
ராமராஜ்ஜியத்தில் கோயில் தர்மகர்தாவிற்கு
மறுஜென்மம் பைரவர் என்பதை..அறிந்திடா
அறங்காவலர்தம் தளர்காப்பில்,
முதலாளிஸ்டிகளின் செங்கோலில்.. தமிழ் மண்ணின்
விலையில்லா கலை செல்வம் கொள்ளை போவதை
தடுத்திட மீட்டிட ஒரு மதுரை வீரன் போதுமா.?
போதாது..புறப்படு.! ஆயிரம் மாணிக்க வேல்களோடு..!



*-அருள்சந், திருச்சி, 10-11-2018*

# கொஞ்சம் தள்ளி போடுங்கள்..



எப்பொழுதும் போல் நிலா சாயும் நேரம்..
தூங்கும் பனிநீரை புற்களின் மீது என் விழிகள் தேடின..
காலை கதிரில் மரகதபச்சையில்
வைரமாய் ஒளிரும் பனிநீரை காணவில்லை.
புற்களின் மீதோ சாம்பல் படிவு..
நிலத்தின் சூடும் தணியவில்லை.
இது ஏன்.? எங்கும் நிழல்போல் புகைமூட்டம்..
எனக்கும் என் புற்களுக்கும் மூச்சுமுட்டுவது
எதனாலென்று தெரிகிறது.
இருக்கும் கரிமுழுதையும் பாரெங்கும் எரிப்பதனால்.
தள்ளி போடுங்கள்..



பள்ளி பருவத்தில் பாடம் படிக்கையில்
லாந்தர் புகையோரம் கூரையில் ஆடும் கருப்பு ஒட்டடை.
அம்மா சமைக்கையில் கொதிக்கும் உலையின்
ஆவியில் ஆடிடும் கரிய ஒட்டடை.
அந்திம காலத்தில் வாட்ஸ்அப் படிக்கையில்
சுவற்றின் மூலையில் மின்சார காற்றில்
அசைந்தாடிடும் அந்த கருப்பு ஒட்டடை..
லாந்தரும் அடுப்பும் அருகிய பின்பும்
இன்னும் ஏனிந்த கருப்பு ஒட்டடை.?
எதனாலென்று தெரிகிறது.
மாடும் குதிரையும் வண்டியிழுத்த பாதைகள்
விரிந்து கலர்கலராய் கார்கள் பேருந்துகளாய் விரைவதனால்.
தள்ளி போடுங்கள்..



வளர்இளம் பருவத்தில் பாய்ந்தோடும் ஆற்றில்
தாவி குதித்து நீந்தி மகிழ்ந்ததை..
பளிங்கு நீரை அள்ளி குடித்ததை..
மங்கிய கண்களில் கூர்ந்து பார்க்கிறேன்..
இப்பொழுது.. மணல்கூட இல்லை.!
ஓடையும் குட்டையுமாய் கழிவுநீர்..
இது ஏன்.? காட்டை அழிப்பதும்..
ஆற்றின் ஓட்டத்தை அணையால் மறிப்பதும்..
தரணிக்கே விற்றிட ராத்திரி பகலென
மணற்கொள்ளையடிப்பதும்..
உலகின் ரசாயணம் ஊரணியில்கூட கழிவாதலும்..
அதனாலென்று தெரிகிறது.
தள்ளி போடுங்கள்..
உயிரின் சூழல் மாய்தலை
கொஞ்சம் தள்ளி போடுங்கள்.!



*-அருள்சந்,திருச்சி,18-11-2018*





# சேர்ந்து துடுப்பை போடுங்க.!
# ஐலஸா..ஓ..ஐலஸா...

1930-களில் குருவாயூர் ஸ்ரீகிருஷ்ணணின்
பிரசாதம்,தரிசனம்.. அனைவரும் பெற்றிட
காங்கிரஸ் தீரர்.. கேளப்பனின் சாகும் உண்ணா நோண்பு..
காந்திமகான் தலையீடு..A.K.கோபாலன் முயற்சி...
ஸ்ரீகிருஷ்ணணின் பிரசாதம்,தரிசனம்.. 1936-ல்
ஜாதி இந்துக்களுக்கு சாத்தியமானது.!
பட்டியலினத்தோர்க்கோ ஏதுமில்லை.
Dr.அம்பேத்கரிடம் சங்கராச்சாரியார்..நீர் ஏன் போராடவில்லை.?
வினாவிற்கு கௌதமரின் சீடர்
சிவில் உரிமைகளை பெறுவதற்கு படைதிரட்டுவேனேயன்றி
வருணத்தை காத்திடும் ஸ்ரீகிருஷ்ணணின் தரிசனத்திற்காய்
என் மக்களின் சக்தியை விரயமாக்கேன்..
இளமையில் கற்றதில் என் ஞாபகமீட்சி..



வனத்தை அழிப்பதும் கனிம வளத்தை
மைதாஸ் போல் கபளீகரம் செய்வதும்
படுகை நிலத்தை உள் ஊடி எண்திசைக்குடைந்து
மீத்தேன் குடிப்பதும் இப்படி..
பொன்நெல் பூவுலகை,மருதத்தை பாலையாய்
காயமாக்கிடும் கல்ஃப வளர்ச்சியை
தடுத்திடத்தயங்கும் நீதிமான்கள்..கடைசி காலத்தில்
மண்டல விரதத்தில் தேவியின் தரிசனம்
கானகக்கடவுளுக்குமென
முத்திரை எழுதினர்..மூண்டது கலகம்..
ஏழு மண்டல தீய பழக்கத்தின் தீட்டு நீங்க
ஒரு மண்டல மேனிசுத்தம் ஆண்களுக்கு போதுமே என்ற..
பெண் தரிசனம் கூடாதெனும் கானகக் கோவிலும்,
ஆண் பிரவேசம் ஆபத்தெனும்
கூரையில்லா யோகினி கோவிலும்..
நாடெங்கிலும் வியாபித்துள்ள,வேற்றுமை கொண்ட
இந்துத்துவா சமுத்திரம் கடந்திட..
தேவி தரிசனமும் ஏன்.!பெண்-மடாதிபதி,ஆதீனமும்,
வன்துடுப்புகளாகாது.. மென்துடுப்புகளே.!



மலம் அள்ளி,நாற்று நடவி,
நாட்டிய பேரொளி என்பதைத் தாண்டி
தீண்டாமை அகற்றி கல்விஞானம் பெற்று
பாரதம் ஆளும் ஜனஅதிபதி ஆகி
பதியும் பத்தினியும் ஓர்நிகர் என்று..
மானிடம் போற்றும் நற்பண்பு ஒன்றே.!
சாதி மத பேதங்களை அகற்றி..வேற்றுமை கொண்ட
இந்துத்துவா சமுத்திரம் கடந்திடும் வன்துடுப்புகள்.!

*- அருள்சந் திருச்சி 05-11-2018*

# ராத்திரி நேரத்து யுத்தம்.

மென்மையாயும் ராட்சஷனாகவும்
எங்கும் வியாபித்திருப்பான்.
அவன் உடல் அடிக்கடி நலம் கெடும்.
கால்களில் சில எப்பொழுதும் முடமாகும்..
நலம் காக்க இரவு பகல்
எண்ணிலா மருத்துவர்கள்.
மற்றதற்கெல்லாம் இல்லையெனினும்
தண்ணீர் இரைக்கவாவது
அவன் வேண்டும்.
உணவிற்கும் கழிவு நீக்கலுக்கும்
நீர் மிக அவசியமல்லவா.!

கரையெங்கிலும் பேரிடர் நிகழுமென
வருமுன் காத்தலிற்கு தயார் நிலை..
அது துன்பம் தந்த ஓர் இரவு.
காட்டுயானையாய்
களம் இறங்கியது கஜா புயல்.
ராத்திரி நேரத்து யுத்தம்.
மன திரையில் போர்கள காட்சி..
கரை படகுகள் உடைந்து தெறித்தன.
விளைநில தென்னைகள்
வேரோடு சாய்ந்தன.
ஏழை குடிசைகள் எண்திசை சிதறின..
கூரை ஓடுகள் தெறித்து பறந்தன..
நெய்தல்,மருதம்,முல்லை போதாதென
கொடைகாட்டிலும்
வான்மரங்களை சாய்த்தது..
ராட்சஷனின் லட்சம் கால்களை எங்கெங்கும்
ஒடித்தெறிந்தது கஜா புயல்.
பாதி தமிழகம் இருளில் மூழ்கியது.

வாழ்வென்றாலும் அழிவென்றாலும்
சாம்ராட் அசோகனாய் மனம் மாறுதல்
பஞ்ச பூதங்களுக்கு எப்பொழுதுமில்லை.
உயிரில்லா மின்மரங்கள்
மன்னரின் சேதம்.!
உயிருள்ள நீர்மரங்கள்
குடிதம் வாழ்வின் சேதம்..
மக்களின் உடைமைகள்
மன்னரின் உடைமைகளாயின்
அனைத்தும் மன்னர்தம் சேதம்.!
சேதங்களை சரிசெய்வது
மன்னரா.. மக்களில் சிலரா.?
மக்களின் உழைப்பில் அளவிலா
செல்வம் சேர்த்தோர் பலகோடிகள் தருவதும்..
நடிப்பில் கேடிகளை அழித்து,
சிறுதுளியாய் குடிகளிடம் பலகோடிகள் ஈட்டி,
அதில் சிலகோடிகளை
தனியாய் தானம் செய்வதும்..
மனிதாபிமானமா..பரிதாபமா.?

நிஷா,வர்தா,ஒகி,கஜா என
காலம் காலமாய் புயல் தொடர்வதை
சுவரெழுப்பி தடுத்திட முடியுமா.?
“விவசாயி-கூலி,முதலாளி-தொழிலாளி,
பெருவணிகன்-சிறுவணிகன்”..இப்படி
முரண்பட்ட மனிதன் இனி
மன்னனின் உடைமைதான்
என அழைக்கும் காலத்தில்
சேதங்களை சரிசெய்வது யாவருக்கும்
நிறைவாய் இருக்கும்.

*-அருள்சந்,23-11-2018,திருச்சி.*










# கும்பன்.

புராணகாலத்தில் சிவனின் தம்பிக்கு
உடல்முழுதும் தீராத படை..
வைத்தீஸ்வரன் கோயில் குளத்தில்
குளித்தெழுந்ததால் பொன்மேனியானது..
புதுமைபித்தன் துன்பகேணியில்
கங்காணியின் ஆறாத பறங்கிப்புண்
தாமிரவருணியில் மாலைபொழுதினில்
நீந்தி குளித்ததில் செந்நிற மேனியானது..
கோயிலில் படித்ததும் நாவலில் வாசித்ததும்
இனி நீர் சுத்தம் செய்யும் என்பது
ராசிபலனில் மட்டும்தான்.!

எட்டு குடித்தனம்.. முப்பதுபேர்.. என்
வருவாய் வளர்த்திடும் வண்ண குடியிருப்பு..
அடுப்படி கழிவு, ரெஸ்ட்ரூம் வடிதிரவ கழிவு
எல்லாம் அடுத்தவன் காலிமனையில்..
சந்தனம் கோபிக்கும் சாக்கடை குட்டையில்
விரிந்து வளர்ந்த கருவேல மரத்தில்
குகூவென கருங்குயில்..
கழிவை சிந்திடும் அதிகாலை பொழுதில்..
எல்லை கல்லில் காலொன்றை வைத்து
சாக்கடை குட்டையில் கழிந்து செல்லும்
சந்தோஷ தெரு நாய்..
இருபெட்டையுடன் சேவலொன்று செத்திக்கிளறி
சாக்கடை புழுக்களை கொத்தித்தின்னும்..
பெருமழை காலத்தில் காயும்நதிக்கு
கரைந்தோடிடும்..சாக்கடை கழிவு..
யாரால் என கேட்பான்..
காக்கை குயில் தெரு நாயால் என்பேன்.

துணிகடை வைத்தோ மளிகை விற்றோ
அற்புதன் ஆக முடியாது.
மலையை தின்று கடலை துளைத்து,
அதில் ஊறும் எரிஎண்ணையை குடித்து,
போதாதென்று படுகையையும் தூர்த்து
நெருப்பின் ராசியானவனாய்
வாழ்ந்தால் மட்டுமே
அற்புதன் ஆக முடியும்.!

படிப்பை பாதியில் விட்டவன்..பெற்றவன்
பழய இரும்பு செம்பு பொறுக்கி விற்றவன்..
நான் அப்படி வாழமாட்டேன்.
அற்புதன்,கும்பன்களின் ரகசியம் அறிந்தபின்
கடைசியாளாகவே பயணத்தைத்துவக்கினேன்.
முதலில் ஒரு மலையை தின்றேன்..
என் வயிற்றின் கந்தக அமிலம்
அலுமினியத்தைக்கொட்டியது..
இன்னொரு மலையை கடித்தேன்
மின்னிடும் வைரங்களாயிற்று..
உலகெங்கும் பெரும்மலைகளை அழித்தேன்..
அற்புதன் ஆனேன்.!

என்னை சுற்றிலும் எதிரிகள்..
உலகின் அற்புதன்களும் கும்பன்களும்
எப்போதும் என் எதிரிகள்..
என் வேதாந்தம் எளிமையானது..
சூரியன் ஓர் எரிநெருப்புதானே..
நீர்,நிலம்,காற்றில் அதன்
கதிர் துகளவு சுடும் மூலபொடிகள்
எண்ணிலாமல் காலம்தோறும் கலப்பதுதானே..
நானும் சூரியன்.!

பகைவரில்லா வீரபாண்டியூரில்
மீண்டும் மலையை தின்று கந்தகம் குளித்தேன்.
செக்கசிவந்த செப்பு பாளங்கள்..
நான் கும்பனாக போகிறேன்.!
இங்கேயும் எதிரிகள்..
இவர்கள் ஏழைபாழைகள்..
பூங்காற்றை எரிக்கின்றேனாம்..
நீரையும் நிலத்தையும் நஞ்சாக்கினேனாம்..
எதிர்த்தவர் சிலரை பதம் பார்த்தேன்..
ஊரைகூட்டி என் வீட்டை அடைத்தார்கள்.
இயற்கைக்கு எதிராய் என்ன செய்துவிட்டேன்.?
அவன் செய்வதைதானே செய்கிறேன்.
நான் எரிக்கும் சூரியன்..
பச்சை சாவியால் வீட்டைத்திறப்பேன்..
நிச்சயம் நான் கும்பனாவேன்.!

-அருள்சந்,திருச்சி,07-12-2018





Arputham = One Billion, Kumbam = Ten Trillion

# 2019-ல்..எது மலை.?



கெட்டது மிகவும் கெட்டதாகிறது.
நல்லது மிகவும் நல்லதாகிறது.
முன்னது மலையளவு..பின்னதோ மடுவளவு.
மும்மாரி குடிகளிடம் மனம் திறக்கிறேன்.!
அற்புதன்,கும்பனிடம் ரகசியம் காக்கிறேன்.!
கருப்பை பிடித்து குடிகளுக்கு தருஊவேன்..
ஜிஎஸ்டி குடித்து மக்களை வறுப்பேன்..
அப்பானி,அகர்வத்தி-பனியாக்களுக்கு
ராஜாங்க தொழில்,செல்வங்களை
ரகசியமாய் வாரி கொடுப்பேன்..
முன்னது மடுவளவு..பின்னதோ மலையளவு.





அன்று வெள்ளையன் நகைப்பில்
வோட்டருக்கு பணம் தந்தது
மகாத்மாவுக்கே தெரிந்தது..
அம்பேத்கர் அம்பலமாக்கினார்.!
இன்று பெயரில்லா புத்தாண்டில்
கருப்பு வேஷத்தில் ரிசர்வ் பணம்
குடிகளின் சிறுகணக்கிற்கு..
வோட்டெல்லாம் இனி என் சட்டை(ச)பைக்கு.!
முன்னது மடுவளவு..பின்னதோ மலையளவு.





கெட்டதை கொன்று நல்லதை நல்கிடும்
ஶ்ரீராமன்,கிருஷ்ணன்,மகாதேவன்..
வீரன்,அய்யன்,அம்மன்..
ஆண்-பெண்-திருநங்கை-தெய்வங்கள்..
அற்புதகுடிகளின் நம்பிக்கை விளக்குகள்.!
வானம்-அருவம்-ஒற்றை கடவுள்..இதைத்
திருடிச்சேராது பெருஞ்செல்வம்.!
சுடுமண்ணிலும்,கல்லிலும்,ஐம்பொன்னிலும்
ஒப்பிலா கவின் கடவுள்கள்..
திருடினால் சேருமே பெருஞ்செல்வம்.!
கலியுக வட்டபுது விகாரியில்
நடுரோட்டில் நந்தவனத்தில் நாயகமாய் நிற்கும்
“வெண்கல சிலைகளும்” இனி விற்கப்படலாம்.!
முன்னது மலையளவு..பின்னதோ மடுவளவு.
2019..பெயரில்லா புத்தாண்டே
வேகமாய் சுழன்று வந்திடு.!
கெட்டது மிகவும் கெட்டதாகிறது.
நல்லது மிகவும் நல்லதாகிறது.



-அருள்சந்,திருச்சி,30-12-2018



# போலீஸ்டேசன் ரெண்டு கொடு..



காலை வெயில் சுள்ளென்று முகத்தில்..
கழுதைக்கு என்பது சரிதான்..
கடைவாசல் நிழலில் பாட்டில் நீரை குடித்தேன்.
கடலை பருப்பு ஒருகிலோ..வேற...
கருப்பு உளுந்து ஒருகிலோ..வேற...
பள்ளிகூடம் ரெண்டு.. ம்ஹூம்
என்னவே.. அண்ணாட்சி கோயிலை
நாங்களா விக்கிறோம்..? வேற...
அப்போ ரெண்டு போலீஸ்டேசன் கொடு..
காலைல கிறுக்கு எதாச்சும் புடிச்சிறுச்சா..? வேற...
நானொன்னும் கிறுக்கில்ல.
காமராசர் காலத்தில பள்ளிக்கூடம் தொறந்தாங்க..
சண்டநடந்தப்போ எதிரிக்கு டீசல்போட்ட
எண்ணெகம்பெனிய எடுத்துக்கிட்டாங்க..
தனியார் வங்கிய அரசு வங்கியா ஆக்கினாக..
அதுவெல்லாம் அந்தக்காலம்..





கல்வியும் வேலையும் கடைசரக்காயிடுச்சு..
தொலைபேச்சும் காட்சியும் பணகாய்க்கும் மரமாச்சு..
கோதாவரி எண்ணெய் அம்பானிக்கே ஆட்சு..
எல்லாம் பத்தாம நாட்டைக்காக்கும்
ராணுவ கம்பெனியும் இப்ப அவனுக்குன்னும்போது
போலீஸ்டேசனு கலெக்டராபீசு எல்லாம்
கடையில இனி கிடைக்குமிலே..!
தாளிக்கற உளுந்து அரைகிலோ..
நீ சொல்றதும் சரிதான்..
ஹைதராபாத் நிஜாம்,புதுக்கோட்டை ராஜா இப்படி
ஒன்னாச்சேத்த எல்லாத்தையும் இனி
ஒடைச்செறிஞ்சுறுவான் போலிருக்கே..வேற...
சிவப்பா வறமிளகா அரைகிலோ..மல்லி முக்கால்..வேற...
வீட்டிற்குள் நுழைந்ததும் லேண்ட்லைன் அழைப்பு..
பேத்திக்கு ஜூரம்..ஆஸ்பத்திரிக்கு கொண்டு போங்க..
சிபிஎஸ்இ டீச்சர்..!



-அருள்சந்,திருச்சி,15-02-2019



# போற்றித்துதிக்கிறேன்.!





கொஞ்சம் நற்செயல் நிறைய தீஞ்செயல்
அவனை தீயவன் என்போம்..
நிறையவே நற்செயல் குறைவாய் தீஞ்செயல்
அவரை நல்லவர் என்போம்..
துதித்தல் போற்றுதல் இல்லா எழுத்து
வையத்துள் ஏதேனும் உண்டோ.?
தீயனை துதித்தலும் நல்லோரை போற்றலும்
காலத்தின் வரிகளில் காட்சியாய் தோன்றி மறைபவை..
காலம் தோறும் நல்லோர்,தீயோர் ஆயினும்
தீந்தொழில் இ∴தென வருமுன்னர்
குறி சொல்லி தீஞ்செயல் மாய்த்திடும்
தீர்க்கர்கள் சிலரே வாழ்ந்திடும்
மாயா தமிழ் நிலமிது.!



இருள் கானகத்தில் மகர விளக்கில்
ஐயனை தரிசித்தால் தீயது மாய்ந்திடும்
நம்பிக்கை விருட்சமாய் பந்தம் காத்திட
பதினெட்டாம் படியில் லட்சம் சாமிகள்..
உள் மூச்சடக்கி முத்துக்குளிக்கும் தூத்துக்குடியில்
மூச்சுத்திணறல்,நுரையீரலில் புற்றா.? ஆம்.!
தீந்தொழில் ஸ்டெர்லைட் நச்சினை விழுங்கிட..
நீதிதேவதையின் உச்சமன்றத்தில்
நீலகண்டனே.. நாதனே ஒரு மாமாங்கமாய் நீ..
தன்னந்தனியாய் ஏறிய படிகள் எத்தனையப்பா..!
உன் பூபாள கீதத்தில் தூத்துக்குடியில் புரட்சி..
இன்னுயிர் 33 களபலி கண்ட பின்னும்
மண்ணை,பூங்காற்றை,தெளிர்நீரை,உயிரை
நமக்குதானென்ற சுயநலம் பாராது
வரும் தலைமுறைக்கு ஈதலே சான்றென்ற
உன் வீர சமரினால்..
ஸ்டெர்லைட்டைத்திறவென
அன்று தீயனை துதித்த பசுமையின் குரல்வளையை
இன்று நீதிதாய் நெறித்துவிட்டாள்..சபாஷ்.!











தீந்தொழில் இ∴தென்றழித்த தீரரை
போற்றித்துதிக்க நம் பாரதி இன்றில்லை..
என் மனத்திரையில் பேரானந்தம்..
போற்றித்துதிக்கிறேன்.. தீரரே.. வைகோ உம்மையே.!
வெல்க தூத்துக்குடி புரட்சி.!

*-அருள்சந், திருச்சி, 27-02-2019*



# கெட்ட போரிடும் உலகில்..



மகாபாரதமும் சிலுவை போர்களும் பேரானந்தத்தைத்தரும்.
பாஞ்சாலிக்கு ஸ்ரீகிருஷ்ணனின் தறியிலிருந்து துகில்..
கலிங்கத்து பரணி களிப்பையும் மகிழ்சியையும் தரும்.
வீரர்களின் தாகம் தணிக்க வெற்றி முரசு கொட்டி
கடைதிறக்கும் இளம்பெண்கள் சோழபுரத்தில்..
உலக யுத்தமும் வளைகுடா போர்களும்
வல்லரசென பெருமிதம் கொள்ளும்..
நாஜி-அமெரிக்க படைவீடுகள் பெண் சுகம் தீர்த்து
பயெனட் முனைகளால் குத்திக்கொல்லும்.
இக்களிப்பும் மகிழ்சியும் யாருக்கு.? ஆண்களுக்கே..
பாரத் மதா..இனியொரு யுத்தம் கனவிலும் வேண்டாம்.
இது யாரின் அழுகுரல்.? இடுநிலத்தில் உன் சுவடு கூடாது
உயிரை ஈன்றிடும் நம் தாயின் அழுகுரல்..



பாகிஸ்தான்-இந்தியா..நாடு பிரிகையில் சிதறிய இரத்தம்
அகிம்ஸை போர் மகாத்மாவின் உயிரையே குடித்தது.
இட்லரின் ராணுவம் கற்பழித்த, கொன்ற யூதப்பெண்களைவிட
கிழக்கு பாகிஸ்தானில்..1971ல்
உருது பேசிடும் பாகிஸ்தான் ராணுவம்
வங்க மொழி இஸ்லாமிய,இந்துப்பெண்களை
கற்பழித்ததே அதிகம்..கருக்கலைத்ததுபோக
முப்பதாயிரம் அப்பன் பேரில்லா போர் குழந்தைகளை
பெற்றெடுத்த கொடுமையை உலக வரலாறு எழுதிச்சென்றது.



தெற்கே இலங்கையில் ராணுவத்தால்
கற்பிழந்து கைம்பெண்ணான இந்துத்தமிழச்சிகளின்
கண்ணீர் காட்சிகள் இன்னும் மாறவில்லை.
காஷ்மீரம்,காலிஸ்தான்,வடகிழக்கு,விடுதலைபுலிகள்,சதீஸ்கர்..
எல்லா இடத்திலும் சுதந்திரம் அடைந்து எழுபது ஆண்டுகளும்
தீவிரவாதி..துனை ராணுவம்.. துப்பாக்கி சத்தம்..
பெண்கள் கற்பழிப்பு..நீதி விசாரனை..
இந்தியா இன்னும் பெண்களின் அழுகுரலில்..



போரிடும் உலகில் களிப்பும் மகிழ்சியும்
யாருக்கு.? அதிகார வெறிகொண்ட ஆண்களுக்கே.!
பாவேந்தரின் புதிதாய் ஒரு உலகை செய்திடும் கனவு..
கெட்ட போரிடும் உலகை வேரொடு சாய்க்கும் பொழுதில்
நம் தாயின் கண்ணீர் ஆனந்தமாகி
களிப்பும் மகிழ்சியும் பேரானந்தமும்
பெண்ணிற்கு நனவாகும்.

*-அருள்சந், திருச்சி, 03-03-2019*








# பொள்ளாச்சி சந்தையில..

ராஜகுமாரிகள்,அந்தபுற அழகிகள்..பேரரசர்களுக்கு.
கணிகையர்கள்,மூகற்புக்கரசிகள்..செல்வந்தர்களுக்கு.
புறதேச பெண்கள்,கடைதிறக்கும் காரிகைகள்..
வெற்றி படைவீரர்களுக்கு.
நன்செய் புன்செய்களில் களை நீக்கும் பெண்கள்
உழுதுண்டு செல்வோர்பின் தொழுதுண்டு செல்வோர்க்கு..
பெண்ணை கெடுப்போரை தின்று பசித்தீர்க்க.
யோகினியும் இந்திரஜால முதுபேய்களும்...
இவைதான் உலகினில் பெண்ணின் இறந்த காலம்.

கூரை ஏறி ஓட்டைப்பிரித்து கருப்பு வெள்ளையில்
தமிழ் நடிகையை புகைப்படமெடுத்து மிரட்டி காசு பறித்தான்
அந்தமான் சிறைக்கைதி இந்துநேசன்..1940களில்
பெண் கொடுமை ஒழிக்க.. அவனை..
தியாகராஜரும் கலைவாணரும் கொலை செய்தார்கள்.
துணிவிற்று பெண்ணைக்கெடுத்து கழகம் நடத்திய
பட்டாளத்தான் ஆளவந்தானை 1950களில்
கழுத்தை அறுத்து கொலைசெய்தாள் ராயபுரத்து தேவகி.
கல்லூரி மாணவிகளை கடத்தி ருசித்துப்பின்
அரசியலார்க்கு களியாட்ட பொருளாக்கி 1980களில்
வங்கக்கடலில் கொன்றெறிந்தான் தூக்கிடப்பட்ட ஆட்டோசங்கர்.

பொள்ளாச்சி சந்தையில வெள்ளாட்டை வித்துபுட்டு
நல்ல துணி வாங்கித்தாமா..என்றோ கேட்ட பாடல்...
இன்றோ மாணவி கெஞ்சி கதற
ஆடை அவிழ்க்கபடும் பொள்ளாச்சி.
பெண்னண படம்பிடித்து கழகமாக்கிய
பார்நாகராஜனும் தம் அரசு அரசியல் சகாக்களும்
நடுரோட்டில் கொல்லப்பட வேண்டியவர்கள்..
நீதியும் விசாரிப்புகளையும்.. களத்தில் காண்போம்..

இறந்த காலமும் சுதந்திர காலமும்
பெண்ணை ஐந்தாய் தரம் பிரித்தே கடந்து செல்கிறது.
பேரரசர்கள்,வைசிராய்கள்,ஜமீன்கள்..முடிவுக்கு வந்து,
அதிகாரிகள், கோடீஸ்வர சட்ட-பாரளுமன்றத்தார்
பெருந்தனக்காரர்கள் எனவிருக்கும் நிகழ்காலம்
ஒரே தரத்தில் பெண் வாழ கடைதிறக்காது.
ஓராயிரம் துர்கை காளிகள் சாமி ஆடினாலும்
பெண்ணிற்கு சரிபாதி அதிகாரம் முப்பதுகூட கிடைக்காது.

எந்தப்பெண் மயிலும்
தோகைவிரித்தாடும் ஆண் மயிலை
களித்தபின் கொன்றதில்லை.
எழுபது ஆண்டுகள் கேட்பதும் தருவதும்..
பெண்ணின் சம உரிமை
இரந்து பெற்றிடும் சலுகையன்று.
பெண்ணை அடக்குவர் வாக்கு வங்கியாய்
ஏமாறிய காலம் போதும்..
இனி தெருவில் இறங்கி ஆணிடமுள்ள
அதிகார பழத்தில் தனது பங்கை
தட்டிப்பறித்திடும் மங்கம்மாளாய் போரிடல் வேண்டும்
என்பதை எழுதட்டும் என் பெண் கைவிலங்கு.!



*-அருள்சந், திருச்சி, 20-03-2019.*

# ஒருமுறையாவது அடக்கிப்பார்ப்போம்.!

சிற்றரசு-பேரரசு செங்கோலாட்சி..
இன்றும் பலர் என் பாரம்பரியமென்பர்..
அடிமைகாலத்தில் பெரும்தொழிலும் ஜனநாயகமும்
மேற்கிலிருந்து பரவிய சீமைக்கருவேலன்..
உழவை-தொழிலை அழித்துவிட்டது.!





சிறுகுச்சிகொண்டு சுட்டும் விரலில் மையிடுதல்..
பிறப்புரிமையெனும் மக்களாட்சி..இதில்
வாக்குரிமையும் விற்கபடும்..
வேட்பாளனும் விலைபேசப்படுவான்..
பதினாறு மையிட்ட முதியோருக்கு நன்கே புரியும்..
முதல் இளம் மையிற்க்குத்தெரியாது இதன் சூட்சமம்.
மேற்கிலிருந்து பரவிய இன்னொரு விருட்சம்..
விழுதாய் வேர்பிடித்த
சீனத்தில் இதுவரை யாரும் மையிட்டதில்லை..
பொய்யும் புனைவும் உள்ளதால்தானே அழியா மை.!
உழவும் தொழிலும் அங்குபின் சென்றதில்லை.
இளம்தலைமுறை புரிதலில் இருக்கு புதியதோர் உலகம்.!

எ.்.ப்எம் வானொலி தினம்சூழல் காப்போம் என்றதால்..
உழவர் சிந்திய கண்ணீர்.. நீதித்தாயின் பேனா மை..
எட்டுவழி பசுமைச்சாலை தோற்றது.!
சூழலுக்கும் மீத்தேன் குடித்து உழவை அழித்திடும்
சூழல் அழிப்போர்க்கும் இடைஇன்று பாரதப்போர்.!
பாம்பையும் பார்பணியத்தையும் கண்டால்
பாம்பை அடிக்காதே.. இது தந்தையின் குரல்.
பாம்பை அடித்தால் வயலில் பெருச்சாளி..
தட்டில் சோறு விழாது..
பாம்பை அடிக்காதே இது சூழல் காப்பது.!
பார்ப்பணியத்தை அழி.!





சாசுவதமாய் ஆடு,மாடு,குதிரை..
நெய்யில் எரித்து புகைக்கிளப்பி..அசுவ யாகம் நடத்தி
சூழல் அழித்தது பார்ப்பணியம்.
எரிப்பதா.? புதைப்பதா.? அப்படியே
காக்கைக்கழுகு கொத்தித்தின்னவா.?
தான் செத்தவுடன் இளம்மனைவியை
சுடுகாட்டுத்தீயில் எரித்தது.. தந்தையின்
தலையை உடைத்த பார்பணியத்திமிர்..



B..B..B.. பிரிட்டிஷாரை விரட்ட முடிந்தபோது
பார்ப்பணியத்தை.. பனியாக்களை..
சூழல் அழிப்போர்களை..
சிறுகுச்சிகொண்டு சுட்டும் விரலில் மையிட்டு..
ஒருமுறையாவது அடக்க முடியாதா.?

*-அருள்சந், திருச்சி, 13-04-2019.*